[24th January 1961

SRI A. VEDARATHNAM : இவர்கள் உதவி கோரி ஏதாவது விண்ணப்பம் வந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்கள் உதவி கோரியதாக தகவல் ஒன்றும் இல்லை.

SRI S. M. ANNAMALAI : கேட்பவர்களுக்குக்கெல்லாம் பிரஜா உரிமை தரப்படுகிறது என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். ஐம்பத்தைந்து வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு அந்த இடத்தில் "சிடிசன்ஷிப்" கொடுப்பதில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அது குறித்து இந்த சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுபற்றி என்னிடம் தகவலில்லை.

*Strike*

* 127 *Q.*—SRI K. R. NALLASIVAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் குந்தாப் பகுதியில் நடைபெற்ற வேலை நிறுத்தம் காரணமாக சிறைத் தண்டனை பெற்ற ஊழியர்கள் எவ்வளவு பேர் ?

(இ) அவர்களுக்குச் சிறைத் தண்டனை முடிந்தபின் மீண்டும் வேலையளிக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Sixty-nine persons were convicted and sentenced to various terms of imprisonment.

(*b*) The question is under the consideration of Government.

*Office hours*

* 128 *Q.*—SRI N. K. PALANISAMI and SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to revise the working hours of the offices as 11 a.m. to 5-30 p.m. instead of 10-30 a.m. to 5 p.m. ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. K. PALANISAMI : சென்னை செகரட்டேரியட் என்.ஜி.ஓ. சங்கம், மாகாண என்.ஜி.ஓ.-க்கள் சங்கம் இவை நான்கைந்து மாதங்களுக்கு முன்பாக இம்மாதிரி 10½ மணி என்பதற்கு பதிலாக 11 மணியிலிருந்து 5½ மணிவரை என்று வேலை செய்யும் நேரத்தை மாற்றவேண்டுமென்று சொன்னதற்கு,

24th January 1961]

அதற்குப் பதிலாக இப்பொழுது ஏப்ரல் மாதத்திலிருந்து 8½ மணியிலிருந்து வேலை செய்யவேண்டுமென்று உத்தரவு போடவேண்டுமென்று சொல்வதற்கு காரணம்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** 8½ மணி என்பதுபற்றி முடிவு எடுக்கப்படவில்லை. 10½ மணி என்பதை 11 மணி என்று மாற்றுவதற்கில்லை என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அநேக இடங்களில் நான் என் கருத்தை தெரிவித்துவருவது அவர்களுக்கு தெரிந்திருக்கலாம். காலையில் அலுவலகங்களில் வேலை ஆரம்பிப்பது மிகவும் நல்லது. வேலை நல்லமுறையில் நடைபெறுவதற்கு அது தகுந்தது என்ற கருத்தை தெரிவித்துவந்திருக்கிறேன். நமது அனுபவமும், இங்கு வந்து 8½ மணிக்கு வேலை செய்வது 11 மணிக்கு கூடுவதைவிட நல்ல சுமுகமான சூழ்நிலையில் இங்கு நடக்க முடிகிறது என்ற நமது அனுபவம் இருக்கிறது. இன்னும் முடிவு செய்யவில்லை. எனது கருத்தை தெரிவித்துவருகிறேன், அதுபற்றி மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டுதான் அதற்கான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பது என் கருத்து.

**SRI M. KALYANASUNDARAM:** 8½ மணிக்கு காரியாலயங்களில் வேலை தொடங்குவதாகயிருந்தால் அதனால் உத்தியோகஸ்தர்களுக்கும், மற்ற சிப்பந்திகளுக்கும் ஏற்படக்கூடிய கஷ்டங்களைப்பற்றி, அரசாங்கம் பரிசிலித்தார்களா? இப்பொழுது காலையில் சாப்பிட்டுவிட்டு வரலாம். எட்டரை மணிக்கு என்றால் காலையில் சாப்பிட முடியாது. மத்தியானம் இங்கு சாப்பிட வேண்டியிருக்கும். ஆகவே அதனால் அதிகப்படியான செலவு ஏற்படும். அதற்கு என்ன வழி செய்ய உத்தேசம்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** மாறுதல் ஏற்படும்போது அதில் கஷ்டங்களும்தான் இருக்கும். ஆகவே இதில் எது சரி, எதன்மூலம் அதிக பலன் ஏற்படும் என்று யோசித்து முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. இதனால் ஏற்படும் பிரச்னைகளுக்கு எந்த வழியில் தீர்வு காண முடியும் என்பதுபற்றி சர்க்கார் ஆலோசிக்க கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆகவே அம்மாதிரி மாறுதலினால் ஏற்படக்கூடிய கஷ்டங்களை எப்படி தீர்ப்பது என்பது பற்றியும் ஆலோசித்து அதற்கு ஒரு முடிவு கட்டக்கூடிய முறையில் நான் நாம் ஒரு ஏற்பாடு செய்யவேண்டியதாகயிருக்கும்.

SRI K. VINAYAKAM: May I know at least for judicial institutions like the High Court, City Civil Court and other institutions, the Government would make an exception and allow them to work from 11 a.m. instead of from 10-30 a.m. because it is difficult for lawyers, litigants and the Judges to come in time after taking full meals?

THE HON. SRI C. SUBRAMANIAM: That is a matter for Honourable Judges to decide. I do not think we are going to impose hours of work particularly on the High Court. Therefore I do not think that question arises now.

[24th January 1961

SRI A. A. RASHEED : Will the Government change the working hours to morning at least in the summer when it is so hot that it is difficult to concentrate on work?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is also one aspect which has to be kept in mind. But as I already stated this is a matter which is just under consideration. No question of any decision having been taken arises.

SRI A. VEDARATHNAM : கனம் அமைச்சர் அவர்கள் கூறி வருகிற அந்த மாறுதலுக்கு, காலை 8½ மணிக்கு வேலை துவங்க வேண்டுமென்ற மாறுதலுக்கு நம் நாட்டில் முழுவதும் பெருத்த ஆதரவு இருக்கிற காரணத்தால் அதை விரைவில் அமுலுக்கு கொண்டுவர அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கு ஆதரவு அளிக்கக் கூடிய முறையில் பல கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. சில பத்திரிகைகளும் இதை ஆதரித்து எழுதியிருக்கின்றன. அதே போல் ஒரு சிலர் மாறுபட்ட கருத்தையும் தெரிவித்திருக்கிறார்கள். கடைசியில் எது சௌகரியம் என்று யோசித்து முடிவு செய்ய வேண்டும்.

*Clerks*

• 129 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to change the designation of "clerks" of Madras Secretariat to "Assistants"?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI A. A. RASHEED : Have the Government received any suggestion from the N.G.O.'s Association for changing the name of "Clerks" to "Assistants"?

THE HON. SRI C. SUBRAMANIAM : பெயர் மாற்றுவது என்பது ஒரு வியாதியாக பரவிக்கொண்டு இருக்கிறது. பெயர் மாற்றினால் என்ன வந்துவிடுமென்று தெரியவில்லை. ஆகவே இது அவசியமில்லை. தொடர்ந்து இதையே நாம் உபயோகப்படுத்திக் கொண்டுவருவதில், அதில் இழிவு கிடையாது. ஆகவே இதை மாற்றவேண்டிய அவசியமில்லை என்பது சர்க்கார் கருத்து.

*Fair price shops*

• 130 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to open fair price shops in the North Arcot district owing to the failure of monsoon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have ordered the opening of fair price shops in all districts of this State, including North Arcot district.